


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 61 திருவள்ளுவர் ஆண்டு 2056, விடை – சூன் – 2025



# குடும்பநலத் துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Bedded ward | – | படுக்கைப் பிரிவு |
| Cloth banner | – | துணிப் பதாகை |
| Foam tablet | – | நுரை மாத்திரை |
| Hand bill | – | துண்டறிக்கை |
| Mobile exhibition | – | நடமாடும் கண்காட்சி |
| Regional workshop | – | மண்டலப் பணிமனை |
| Anti–natal | – | பேற்றுக்குமுன் |
| Artificial insemination | – | செயற்கைக் கருவூட்டல் |
| Mobile service units | – | நடமாடும் பணிப் பிரிவுகள் |
| Monogomy | – | ஒரு துணை மணம் |
| Motivation | – | செயலூக்கம் |
| Sanction | – | ஒப்பளிப்பு |
| Nutritional emission | – | ஊட்டக் குறைபாடு |
| Opinion leaders | – | கருத்துரை வல்லுநர்கள் |
| Triple vaccine | – | முத்தடுப்பு ஊசி |
| Primary health centre | – | தொடக்க நல நிலையம் |
| Priority | - | முன்னுரிமை |
| Social barrier | – | குமுகத் தடை |
| Health resort | – | நல்வாழ்வுப் புகலிடம் |
| Fertility | – | கருவுறுதிறன் |
| Sub–centres | – | துணை நிலையங்கள் |
| Review meeting | – | ஆய்வுக் கூட்டம் |
| Safe period | – | காப்புப் பருவம் |
| Screened case | – | மருத்துவத் தகுதி காணப்பெற்றவர் |
| Mass camp | – | பெருதங்கிடம் |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2056, விடை (வைகாசி)

சூன் – 2025

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | திருமதி க. பவானி<br>இயக்குநர் (மு.கூ.பொ.) |
| பொறுப்பாசிரியர் | : | முனைவர் வே. கார்த்தி |
| இதழ்க்குழு | : | திரு. கி. இராமர்<br>திரு. ஏ. காந்தி<br>திருமதி. க. கத்தூரி |



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

# பைந்தமிழ்ப் பணிக்குப் பங்களிப்பீர்

தமிழ் வளர்ச்சித் துறையின் 2022-2023ஆம் ஆண்டிற்கான மானியக் கோரிக்கையின்போது,

"வளர்ந்துவரும் நவீன தொழில்நுட்பத்திற்கேற்ப அனைத்துத் தளங்களிலும் தமிழ்ப் பயன்பாட்டினை அதிகரிக்கச் செய்யும் வகையில் மருத்துவம், பொறியியல், தொழில்நுட்பம் பேன்ற துறைகளில் பயன்படுத்தப்படும் ஆங்கிலச் சொற்களுக்கு இணையான புதிய தமிழ்க் கலைச்சொற்கள் உருவாக்கம் செய்வதற்காகத் தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து துறைசார் வல்லுநர்களைக் கொண்ட குழுக்கள் அமைத்து, புதிய கலைச்சொல் அகராதிகள் உருவாக்கப்படும்"

என்று அறிவிக்கப்பட்டதற்கிணங்க அரசாணையும் வெளியிடப்பட்டது. அந்த அரசாணையின் அடிப்படையில், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில் 2025-2026ஆம் நிதியாண்டிற்கு வேளாண்மைக் கலைச்சொல் அகராதி உருவாக்கத் திட்டமிடப்பட்டுப் பணிகள் நடைபெற்றுவருகின்றன.

இந்த அகராதியில் வேளாண்மை மற்றும் உழவர் நலத்துறையின்கீழ் இயங்கும்

1. வேளாண்மை இயக்ககம்
2. தோட்டக்கலை (ம) மலைப்பயிர் இயக்ககம்
3. வேளாண்மை விற்பனை (ம) வேளாண் வணிக இயக்ககம்
4. வேளாண்மைப் பொறியியல் துறை
5. தமிழ்நாடு நீர்வடிப் பகுதி மேம்பாட்டு முகமை
6. தமிழ்நாடு தோட்டக்கலைப் பொருள்கள் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு நிறுவனம்
7. தமிழ்நாடு சர்க்கரைக் கழகம்
8. சர்க்கரை ஆணையரகம்
9. தமிழ்நாடு கூட்டுறவு சர்க்கரை இணையம்

ஆகிய 9 வேளாண்மைத் துறைத் தலைமை அலுவலகங்களிலிருந்து தேவைக்கேற்ப முகாமையான கலைச்சொற்கள் திரட்டிச் சேர்க்கப்படவுள்ளன.

எனவே தமிழறிஞர்கள், கலைச்சொல் வல்லுநர்கள், துறைசார் அறிஞர்கள், ஆய்வாளர்கள், கல்வியாளர்கள் உள்ளிட்டோர் வேளாண்மைத்துறை சார்ந்த கலைச்சொற்களை kalaisol2016@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்பி வைத்து, பைந்தமிழ்ப் பணிக்குத் தங்களின் பங்களிப்பை நல்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

# இலக்கணமும் மொழித்தூய்மையும்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்

### இருவடிவம்

ஒலிநயத்துடன் கூடிய செய்யுள் வடிவம் போல் இல்லாமல் இயல்பான பேச்சு ஓட்டத்தைக் காட்டும் வகையில் இலக்கணத்துடன் அமையும் மொழி வடிவம் உரைநடை. செய்யுள் வரலாற்றுக் காலத்திற்கு முன்பு தொடங்கியுள்ளது. அது நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்டுள்ளது. செய்யுளுக்கும் உரைநடைக்கும் இடையேயான வேறுபாடு தெளிவாக உள்ளது. "பண்டைத் தமிழிலக்கியமெல்லாம் செய்யுள் வடிவாகவே இருப்பினும், பொதுமக்கள் பேச்சு என்றும் உரைநடையே என்பதை மறந்துவிடல் கூடாது" (பாவாணர் 1968:129). "தமிழ மாந்தர் நீண்ட காலமாக உரைநடையிலேயே பேசி வந்த பின், மதி விளக்கத்தாலும் உணர்வெழுச்சியாலும் தூண்டப்பட்டு, தெய்வப் பற்று, காதல், போர், வாழ்த்து, கதை, வரலாறு முதலிய பல பொருள்கள் பற்றி, எளிய நடையில் தென்மாங்கும் சிந்தும் போன்ற இசைப் பாட்டுகளும், அகவலும் வெண்கலிப்பாவும் இராமப்பய்யன் அம்மானையும் போன்ற செய்யுட்களும், இயற்றத் தொடங்கினர். மோனையெதுகை யமைப்பும் சொற்சுருக்கமும் பொருட்செறிவும் அவர் உள்ளத்தைக் கவர்ந்ததினால், பல்வேறு பொருள்பற்றிய பழமொழிகளும் ஒவ்வொன்றாயெழுந்தன" (பாவாணர் 1968:129). உரைநடை, செய்யுள் ஆகிய இரண்டனுள் காலத்தால் முந்தையது உரைநடை. உரைநடைக்குப் பின்னரே செய்யுள் உருவாக்கம் பெற்றுள்ளது.

தமிழ் மொழியில் எழுத்துருவாக்கம் பெற்ற காலத்திலிருந்து சிறந்த செவ்விலக்கியம் என்னும் தகுதிப்பாடு அடைந்த கழகக் காலம் வரையான மொழிவரலாற்றைப் பற்றிய குறிப்புகள் எதுவும் கிடைப்பதில்லை. எவ்வாறாயினும் அக்காலக் கட்டத்தில் உரைநடை, செய்யுள் ஆகிய இரண்டும் ஊக்கம் பெற்றனவாக இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணரலாம். அக்காலம் தொடங்கிப் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை பெரும்பான்மை, எல்லா வகையான நூல்களும் செய்யுளாகவே இயற்றப்பட்டன. "பண்டைத் தமிழிலக்கியமெல்லாம் செய்யுள் நடையிலிருந்த மையாலும், இலக்கண மெல்லாம் செய்யுள் மொழிக்கே எழுதப்பட்டமையாலும், உரைநடைக்குச் சிறப்பான இலக்கணக் கூறுகளைப் பழந் தமிழிலக்கண நூல்கள் எடுத்துக் கூறவில்லை" (பாவாணர் 1968:288). எவ்வாறாயிலும் உரைநடையும் இலக்கணக் கட்டமைப்போடுதான் இயங்குகிறது. மொழி காலந்தோறும் மாறும் இயல்புடனே இருந்து வருகிறது என்னும் கூற்றின் அடிப்படையில் பார்த்தால் தமிழ் வரலாற்றில் உரைநடை, செய்யுள் ஆகிய இரண்டிலும் மாற்றங்கள் நிகழ்ந்து வந்துள்ளன என்பது வெளிப்படை. குறிப்பாகச் சொல்ல வேண்டும் என்றால் உரைநடையின் தொடக்கக் கால மாறுதல்கள் அதன் வளர்ச்சியாகவே இருந்துள்ளன. இக்கூற்று தொடக்கக் காலச் செய்யுள் மாற்றத்திற்கும் பொருந்தும்.

### மொழிப் பிழை

தமிழில் உரைநடையின் தோற்றம் தொல்காப்பியர் காலத்திலேயே காணப்படுகிறது. என்றாலும் 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்துதான் உரைநடையின் செல்வாக்கு மிகுந்து பரந்துள்ளது. சுருக்கமாக எழுதுதல், மனப்பாடம் செய்தல் போன்றவற்றால் முன்னர் செய்யுள் ஊக்கம் பெற்று வந்துள்ளது. எழுதுவதற்கும், எழுது பொருள்கள் உருவாக்குவதற்கும் பெரு முயற்சி எடுக்க வேண்டிய நிலை இருந்ததனாலும் செய்யுளில் எழுதுவதற்கு முயன்றுள்ளனர் என்றும் கொள்ளலாம். மேலை நாட்டுத்தாக்கம், கல்வி பரவல், எழுதுபொருள்கள் எளிமையாக உருவாக்கல் போன்றவற்றால் இப்பொழுது உரைநடை பயன்பாட்டில் பெரும் இடத்தைப் பிடித்துள்ளது. எவ்வாறாயினும் தமிழ் இன்றைய நிலையில் செய்யுள், உரைநடை ஆகிய இரண்டினையும் உள்ளடக்கியதாக இருக்கிறது. இந்நிலையில் நல்ல தமிழ் என்பது இவ்விரண்டிலும் பிழை இல்லாமல் இருப்பதையே குறிக்கிறது. எழுத்துமொழிக்கு, குறிப்பாக உரைநடைக்கு

அடிப்படை பேச்சுமொழி. அவ்வகையில் வாய்மொழியும் தகுதிப் பாட்டோடு இருக்க வேண்டும் என்பது வெளிப்படை. மொழி எழுதப்படும் பொழுதுதான் நிலைத்த தன்மை பெறுகிறது. ஆகையால் பேச்சுமொழியில் பிழை இருந்தாலும் தாழ்வில்லை என்று குறிப்பாரும் உண்டு. பேச்சுமொழி மொழிப்பயிற்சிக்கான அடிப்படை நிலைக்களன். சரியான மொழித்திறன் பயிற்சியின் தொடக்கத்தில் தவறு ஏற்படலாம். அது தவற்றை நீக்கி நல்ல பேச்சுத்திறன் பெறுவதன் வழி என்றறிய வேண்டும். உண்மையில் பேச்சுமொழியில் பிழையில்லாமல் இருக்க எடுக்கும் முயற்சி அது எழுத்துமொழிக்கு வரும்போது மொழித்திறன் மிக எளிமையாகக் கைவரப் பெறுவதற்கான வழியாக அமையும்.

## மொழித்திறன்

உரிய சொற்களை உரிய முறையில் உள்ளம் கவரும் வகையில் அமைத்து எழுதுவது செய்யுள். பேசும் மொழியை எதுகை, மோனை, சீர், அடி ஆகிய யாப்பிலக்கணக் கூறுகளுக்குள் அடக்காது தெளிவுபட எழுதுவது உரைநடை. செய்யுள் எழுதுவதற்குப் பயிற்சி வேண்டும். பயிற்சியுடன் கற்பனைவளம் இருந்தால் செய்யுள் சிறப்பாக அமையும். ஒரு கருத்தைப் பற்றிய செய்திகளைத் தொகுத்துச் சொற்பிழை, தொடர்ப்பிழை, சந்திப்பிழை இன்றி எழுதுவதை நல்ல உரைநடை என்று கூறலாம். இங்குச் செய்திகளைத் தொடர்புபற்றிப் பத்தி பத்தியாய் பிரித்தெழுதுவதும் படிப்போர் உள்ளத்தில் படியுமாறு எழுதுவதும் கூடுதல் தகுதியுடன் இருக்கும்.

சொற்றொடரியம் (வாக்கியம்) அமைப்பதில் மொழி வழக்குக் குன்றாமல் கையாளும் திறன் வேண்டப்படுகிறது. சொற்றொடரியத்திற்காகத் தெரிவு செய்யும் சொற்கள் கருத்தைத் தெளிவாகப் புலப்படுத்துவனவாக இருக்க வேண்டும். படிப்போர் கவனத்தை ஈர்க்கக் கூடியனவாக உள்ள வரிகளை உற்று நோக்கினால் அவற்றில் உரிய சொற்கள் உரிய வகையில் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். உரைநடையிலும் இலக்கிய நயம் தெரியுமாறு அணி போன்றன அமைந்திருப்பது இயல்பே. தனிச் சொற்களிலும் அணி அமைவதற்கு இடமுண்டு என விளக்குவர் (பாவாணர் 2000அ:3).

எ–டு: "பெண்ணைக் கொடி என்று உவமையாகுபெயரால் குறிப்பதால் பெண் ஆடவனிலும் மெல்லியள் என்றும், அவனிலும் விரைந்து வளர்பவளென்றும், ஒரு கொழுநனைத் துணைகொண்டே வாழ்பவளென்றும் மூன்று பெண்பாற்குணங்கள் குறிப்பாலறியக் கிடக்கின்றன. பெண்கொடி என உருவக வாய்பாட்டாற் கூறுவது முண்டு" (மேலது:4).

## எழுத்துமொழி

எழுத்துமொழி என்பது எழுதப்பட்டதைக் குறிப்பதாக இருந்தாலும் அது மக்கள் பேச்சுவழக்கைச் சார்ந்தே உருவாக்கப் பெற்றிருக்கும். கேட்போர் கவனத்தை எளிதாக ஈர்க்கும் தகையனவாகப் பேச்சுச் சொற்கள் செய்யுள், உரைநடை ஆகிய இரண்டிலும் எழுத்துருவம் பெற்று நிலைத்த தன்மை எய்துகின்றன. இவ்விடத்தில் பேச்சுக்கும் எழுத்துக்கும் இடையேயான தொடர்பு நெருக்கமானதாக இருக்கும். அதே நேரத்தில் பேச்சுமொழிக்கும் எழுத்துமொழிக்கும் இடையே வெளிப்படையாகக் காணும் இடைவெளி இருக்கும். இந்த இடைவெளியில் பேச்சுக்கும் எழுத்துக்கும் இடையே காணப்படும் தொடர்பைக் கூர்ந்து நோக்கித்தான் தெரிந்துகொள்ள வேண்டும்.

செய்யுள் இயற்றுவோர் மிகச் சிலராகவும் உரைநடை எழுதுவோர் மிகப்பலராகவும் இருக்கின்ற காரணத்தால் நல்ல தமிழ் என்று குறிப்பிடுவதைப் பெரும்பான்மையோர் உரைநடைக்கே பொருத்திப் பார்க்கின்றனர். ஆனால் நல்ல தமிழ் செய்யுளுக்கும் பொருந்தும். உரைநடைக்குச் "சரியான சொற்கள் சரியான வரிசையில் அமைந்திருப்பது" (Vallins 1960:12) என்று வரையறை தருகின்றனர். இவ்வரையறை செய்யுளுக்கும் பொருந்தும்.

## இடைவெளி

பேச்சுக்கும் எழுத்துக்கும் இடையேயான இடைவெளி குறைந்து காணப்படும் இடத்தில் சுவையான பேச்சே இலக்கியம் என்னும் தகுதியோடு இருக்கும். ஆனால் பேச்சுக்கும் எழுத்துக்கும் இடையேயான இடைவெளி எல்லா மொழிகளிலும் காணக்கிடக்கும் பொதுப்பண்பாக இருக்கிறது. அதுவும் தமிழ் போன்ற நீண்ட மொழிவரலாறு

உடையனவற்றில் இவ்விடைவெளி அகன்று காணப்படும். பொதுவாக மொழியின் பழைய தன்மையைச் சிதைவில்லாத மொழியின் சிறப்புத் தன்மையாகக் கொள்கின்றனர். அவ்வகையில் நல்ல தமிழ் என்று சொல்லப்படுவதன் மேல் எல்லை செவ்விலக்கியம் என்று போற்றப்படும் கழக இலக்கிய மொழியாகும். இதில் காலத்தால் முந்தியது என்ற ஒரு தன்மையை மட்டும் கொள்வது சரியன்று. காலத்தால் பழைமையானதாக இருப்பதோடு மொழியிலும் செம்மைத் தன்மை இருக்க வேண்டும். நல்ல தமிழுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் கழக இலக்கியத்திற்கும் இன்றைய தமிழுக்கும் பெரிய இடைவெளி காணப்படுகிறது. அப்படி என்றால் நல்ல தமிழுக்குப் பெருமுயற்சி எடுக்க வேண்டியுள்ளது எனக்கொள்ளத் தேவையில்லை.

## பிழை ஏழு

பழந்தமிழ் அடிப்படையில் அமைந்த பிழைகளை "ஒரு திணைச்சொல் ஏனைத் திணைச்சொல்லோடு முடியுந் திணைவழுவும், ஒரு பாற்சொல் அத்திணைக்கண் ஏனைப் பாற்சொல்லோடு முடியும் பால்வழுவும், பிறிதோர் காரணம் பற்றாது ஒரு பொருட்குரிய வழக்கு ஒரு பொருண்மேற் சென்றதெனப் படும் மரபு வழுவும் வினாயதற்கிறையாகாச் செப்பு வழுவும், வினாவப் படாத பொருளைப் பற்றி வரும் வினா வழுவும், ஓர் இடச்சொல் ஓர் இடச்சொல்லோடு முடியும் இட வழுவும், காலக்கிளவி தன்னோடியையாக் காலமோடு புணரும் காலவழுவும் என வழு எழுவகைப்படும்" (தொல்.சொல்.11 சேனாவரையர்) என்று பட்டியல் இடுகின்றனர். இந்த வழுக்கள் இல்லாமல் எழுதுவதே நல்ல தமிழ்.

## மாற்றம்

காலந்தோறும் மொழியில் மாற்றங்கள் நிகழ்கின்றன. மாற்றம், சொல், தொடர், மரபுத்தொடர் ஆகியவற்றில் காணப்படுகின்றது. சொற்கள் பல வழக்கிறக்கின்றன. புதிய சொற்கள் உருவாக்கப்பெறுகின்றன. பல சொற்கள் தாம் கொண்டுள்ள பொருள்களுள் சிலவற்றை இழக்கின்றன. சில சொற்கள் புதுப்பொருள்களை ஏற்கின்றன. எல்லாவற்றிற்கும் மேலாகச் சில புதுச் சொற்கள் உருவாகின்றன. இரண்டு வெவ்வேறு காலக் கட்டத்து மொழி நிலைகளை ஒப்பிடும்போது எந்தக் காலத்து மொழியை நாம் நல்ல தமிழ் என்று எடுக்க வேண்டும் என்னும் வினா எழுகின்றது. இந்த மாற்றங்கள் அனைத்தும் ஓர் இயற்கை மொழியில் ஏற்படுபவை. ஆகையால் நல்ல தமிழ் என்று குறிப்பிடுவது இந்த இயல்பான மாற்றங்களையும் உள்ளடக்கியது. இதில் காலங்கள் தோறும் வழுக்கள் இல்லாமல் இருப்பது நல்ல தமிழ் என்று கொள்வதே சாலப் பொருத்தம்.

மொழி மாற்றத்திற்கு நீண்டகால இடைவெளி தேவை என்னும் கட்டாயம் இல்லை. குறுகிய கால இடைவெளியிலும் மாற்றங்கள் நிகழலாம். அதேபோல் எல்லாக் காலங்களிலும் மாற்றம் ஒரே சீராக இருக்கும் என்றும் சொல்ல இயலாது. சொல், தொடர், மரபுத்தொடர் போன்றவற்றிலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு குறிப்பிட்ட மொழிக்கூறு மிகுதியாக மாற்றம் பெறலாம். இடைக் காலத்தில் தமிழில் அளவிறந்து வடசொல் கலந்ததை இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம். எவ்வாறு இருந்தாலும், மாற்றம் என்ற பெயரில் ஒரு மொழியில் ஒரு காலக் கட்டத்து நிலை அதற்கு முந்தைய நிலையினின்று முழுவதும் அறுபட்டு இருக்காது. ஒவ்வொரு காலக்கட்டத்து மொழியும் அதற்கு முந்தைய தன்மைகளோடு தொடர்பு கொண்டிருக்கும். பழந்தமிழ், இடைக்காலத்தமிழ், இக்காலத்தமிழ் என்றாற்போன்று நாம் கொள்வன எல்லாம் நம் புரிதலுக்காகக் கொள்ளப்பட்ட பகுப்புகள் என்று அறிதல் வேண்டும். இவைபோன்ற எந்த ஒரு பகுப்பையும் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் அடக்குதல் இயலாது. இவை தோராயமாகக் கொள்ளப்பட்டவை. எவ்வாறு இருந்தாலும் ஒரு மொழியின் தொடர்ச்சிநிலை கட்டாயம் இருக்கும் என்று சொல்லலாம். மாற்றம் மொழியின் வாழும் தன்மையைக் காட்டும் ஒரு நிலை என்று குறிப்பிடுகின்றனர். இந்த வாழும் தன்மையைப் பேச்சு வழக்கில் தெளிவாக உணரலாம் என்கின்றனர். பேச்சு பிறவற்றைப் பார்த்துப் புதியனவற்றை உருவாக்குகிறது. உருவாக்கியனவற்றுள் சில நிலைபேறு அடையாமல் மறைந்து விடுகின்றன. சில நிலைபேறு பெற்றுவிடுகின்றன.

## நிலைபேறு

மொழியின் நிலைபேற்றிற்கு எழுத்துமொழி பெரும் பங்காற்றுகிறது. இது கடந்த காலத்து நல்லனவற்றையும், தரமானவற்றையும் பாதுகாத்து வாழும் இக்கால மொழிக்கு அளிக்கிறது. இது நிலைத்து நிற்கும் தன்மையதாக இருப்பதால் தொடர் தன்மையைக் காட்டி நிற்கும். "அடிப்படையில் எழுத்துமொழி என்பது பேச்சு மொழியின் எதிரொலிப்பு ஆகும்.

ஆனால் பேச்சுமொழியில் கிளைவழக்குகள் பெரும்பான்மை காணப்படும். எழுத்துமொழியில் கிளைவழக்கு வேறுபாடுகள் இருந்தாலும், பொதுவாக அவை குறைவாகவும் வெளிப்படையாகத் தெரியாதனவாகவும் இருக்கும்" (Gleason 1974:425). இவ்வடிப்படையிலேயே நல்ல தமிழ் என்று குறிப்பிடுவது பெரும்பான்மை எழுத்துமொழிக் குரியது எனக் கொள்ளப்படுகிறது.

## சொற்கடன்

பிறமொழிக் கலப்பு இல்லாத நிலையில் தான் நல்ல தமிழ் ஆட்சி சிறந்திருக்கும். எவ்வாறோ தமிழில் அயற்சொற்களைக் கலப்பது தொல்காப்பியர் காலந்தொட்டு இருந்து வந்துள்ளது. என்றாலும் கழகக் காலத்தில் அயற்சொற் கலப்பு மிகமிகக் குறைவு. இடைக்காலத்தில் மணிப்பவள நடை என்று தனியாகக் குறிப்பிட்டுச் சொல்லும் அளவிற்கு அயற்சொல் கலப்பு அதிகரித்துள்ளது. அண்மைக் காலத்தில் ஆங்கிலச் சொல் மிகுதியும் கலந்து பயன்படுத்தும் போக்கு காணப்படுகிறது. இதில் குறிப்பிடத் தக்கது என்னவென்றால் முன்னர் பெரும்பான்மை தமிழ் வழக்கில் இல்லாத அல்லது அருகிய வழக்காக இருந்த சொற்களுக்கு மாற்றாக அயன்மொழிச் சொற்கள் பயன்படுத்தப்பட்டன. இப்பொழுது அவ்வாறில்லாமல் ஆங்கிலச் சொற்களை எளிய தமிழ்ச் சொற்களுக்கு மாற்றாகவும் பயன்படுத்தும் போக்கு இருக்கிறது. சில நிகழ்வுகளில் ஆங்கிலப் பெயர்த்தொடர், மரபுத்தொடர் போன்றனவற்றையும் பயன்படுத்துவதைக் காணலாம். இது தமிழில் குறிப்பிட்ட பொருளை அல்லது கருத்தைக் குறிக்க சொல் இல்லாத நிலையில் பிறமொழிச் சொல்லைப் பயன்படுத்துவதிலிருந்து வேறானது. இதில் ஆங்கிலத்தை மதிப்பு மிக்க மொழியாகக் கருதுவதும் அதனைக் கற்க வேண்டும் என்னும் விருப்பமும் அடங்கி இருப்பதை உணரலாம். பெரும்பாலோர் அயன்மொழிச் சொற்களைக் கற்பது கடினம் எனக் கொண்டுள்ளனர். உண்மையில் அயன்மொழிச் சொற்களைக் கற்பது எளிது. அயன்மொழி இலக்கணத்தைக் கற்பதுதான் கடினம் (Gleason 1974:7). இரண்டாவதாகக் கற்கும் மொழியின் அடிப்படை இலக்கணத்தைக் கற்று ஒரு சில ஆயிரச்சொற்களைக் கற்றால் போதும். அம்மொழியில் பேசலாம் அல்லது எழுதலாம். இலக்கியம் படைத்த புலவர்கள் குறைந்த அளவே அயற்சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர். ஆங்கிலத்தில் செகப்பிரியர் பத்து விழுக்காடு அயற்சொற்களையே பயன்படுத்தியுள்ளார். தென்னிசன் பன்னிரண்டு விழுக்காடு அயன்மொழிச் சொற்களையே பயன்படுத்தியுள்ளார். விவிலியத்தில் ஆறு விழுக்காடு அளவே அயன்மொழிச்சொற்கள் உள்ளன (Vallins 1960:31).

## சொல்வளம்

எல்லாவகையிலும் சிறந்து விளங்கிய பண்பாட்டுச் செய்திகளைக் கொண்டிருந்ததால் தமிழ் சொல்வளம் மிக்க மொழியாக விளங்குகிறது. சொற்கள் பயன்பாட்டில் இருக்க வேண்டும். பயன்படுத்தாத சொற்கள் வழக்கிறந்து விடுகின்றன. எண்ணற்ற தமிழ்ச் சொற்கள் வழங்காமையால் வழக்கிழந்துள்ளன. இதற்கு முதன்மையான காரணம், குறிப்பிட்ட சில காலங்களில் தமிழர் தம்மைப் பற்றியும் தமிழ்மொழியைப் பற்றியும் தாழ்வு மனப்பான்மை கொண்டிருந்ததனால் ஆகும். தமிழர்க்கிடையே முன்னர் வடமொழி ஏற்றம் பெற்றதாக இருந்து வந்துள்ளது. இப்பொழுது தமிழர் ஆங்கிலத்தைப் போற்றும் மனப்பான்மை யுடைவராக இருக்கின்றனர். இதன் காரணமாக முன்னர் வடசொற்கள் மிகுதியும் தமிழில் கலந்தன. இப்பொழுது ஆங்கிலத்தைக் கலந்து பயன்படுத்தும் போக்கு இருந்து வருகிறது. இவற்றால் தமிழ்ச்சொற்கள் பல வழக்கிழக்க நேரிடுகிறது. தமிழ் நீண்ட வரலாற்றினைக் கொண்ட மொழியாக இருப்பதால் அதில் பல அருகிப் பயன்படுத்தும் சொற்கள் இருக்கின்றன. இவ்வாறான சொற்களின் பொருளுணர் வதற்குப் பெரு முயற்சி எடுக்க வேண்டும் என்று சிலர் குறைபட்டுக் கொள்கின்றனர். அடிக்கடி பயன்படுத்தும் சொற்களின் பொருள்கள் எளிமையாக விளங்கும் வகையில் இருக்கும். அதே நேரத்தில் அரியதாகப் பயன்படுத்துபவற்றின் பொருள்கள் எளிமையாகப் பொருள் உணரும் வகையில் இருக்கா. இது மொழியின் இயல்பு. அரியதாகப் பயன்படுத்துவன வற்றை அடிக்கடி பயன்படுத்திவிட்டால் அவற்றின் பொருள்கள் எளிமைப்பட்டுவிடும் (பாவாணர் 2000அ:73).

"உவகை, களிப்பு, மகிழ்ச்சி என முத்தென்சொல் இருக்கவும் அவை வழக்கற்று ஆனந்தம், சந்தோஷம், ஜாலி, குஷி முதலிய அயற்சொற்களும், உண்மை, வாய்மை, மெய்ம்மை என முத்தென்சொல் இருக்கவும் அவற்றுக்கு மாறாகச் சத்தியம், நிஜம், வாஸ்தவம் என்னும் வடசொற்களும்" வலிந்து வழங்கப் பெற்று வருவதைக் காட்டுவார் பாவாணர் (மேலது 75). இவை

போன்றவற்றால் முதலாவதாக நல்ல தமிழ்ச் சொற்கள் வழக்கிழக்கின்றன. இரண்டாவதாகத் தமிழில் ஒலியன் இடம்பெறாத அயற்சொற்களுக்காகக் கிரந்தம் போன்ற எழுத்துகளைப் பயன்படுத்த வேண்டிய சூழல் உருவாகிறது. இவை இரண்டும் தமிழ் இயல்புக்கு எதிரானவை. ஒரு மொழியிலுள்ள ஒலிகளுக்கு எழுத்துகள் அமைத்தல் இயல்பானது. அவ்வாறில்லாமல் பிறமொழி ஒலிகளுக்கு வேண்டி எழுத்துகள் கொள்ளல் மொழி கற்றலில் வெறும் சுமையையே கூட்டும். இதில் இரண்டு தன்மைகள் கவனிக்கத் தக்கவையாக இருக்கின்றன. முதலாவதாக அயன்மொழிச் சொற்களைக் கையாள்வதைத் தவிர்க்க வேண்டும். இரண்டாவதாகத் தவிர்க்கவியலாத சூழலில் அயன்மொழிச் சொற்களைக் கையாள நேர்ந்தால் அவற்றைத் தமிழ் ஒலிக்கு ஏற்றாற்போல் மாற்றிப் பயன்படுத்த வேண்டும்.

### தாய்மொழி

"மக்கள் மூளையை மட்டும் பயன்படுத்திக் கருத்து வெளிப்படுத்துவது இல்லை. மூளையுடன் நெஞ்சத்து உணர்வுகளாலும் கருத்தை வெளிப்படுத்துகின்றனர்" (Vallins 1960:33). எண்ணத்திற்கும் அதன் வெளிப்பாடான பேச்சுக்கும் இடையே இடைவெளி ஏற்படா வண்ணம் சொற்களைப் பயன்படுத்துவது சிறந்தது. இவ்வாறான தன்மைக்கு உகந்தது தாய்மொழிச் சொற்களே. ஆகையால் அயன்மொழிக் கலப்பில்லாமல் தமிழைக் கையாள்வது தெளிவாகப் பொருள் உணரும் வகையில் இருக்கும் என்பதில் ஐயம் இல்லை. மொழியின் பயன்பாட்டுகளுள் முதன்மையானதாக இருக்கும் கருத்து தெரிவிப்பதில் தெளிவுத் தன்மை இதில் இருப்பதால் இத்தன்மை நல்ல தமிழின் ஒரு கூறாக விளங்குகிறது.

ஒரு பக்கத்தில் முறையாகத் தமிழ் கற்பதற்கு முன்னுரிமை அளிக்காத நிலை மேலோங்கி இருந்தாலும் மறுபக்கத்தில் தமிழில் சிறப்பாகப் பேசுபவர், எழுதுபவர் ஆகியோருக்கு மதிப்பு இருக்கத்தான் செய்கிறது. கல்வியாளர்களும், குமுகாயவி யலாரும், பிறரும் தாய்மொழிக் கல்வியின் தேவையை உணர்த்தி வருகின்றனர். ஆகையால் பிழை இல்லாமல் தமிழ் மொழியைப் பயன்படுத்தும் வகையில் சிலரையாவது ஊக்க வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். எழுதும் எழுத்து சிறிய அளவினதாக இருந்தாலும். கட்டுரையாக இருந்தாலும் அது நல்ல தமிழாய் இருக்க வேண்டும் என்று பலர் விரும்புகின்றனர். இன்னும் சிலர் மேடைப்பேச்சு, திரைப்பாடல் போன்றவற்றில் திறமையாக விளங்க வேண்டும் என்னும் ஆவலுடன் இருக்கின்றனர். பிறமொழியில் வரும் புதுப்புதுக் கருத்துகளைத் தமிழில் கொண்டு வரவேண்டிய கட்டாயம் இருக்கிறது. இவற்றிற்கெல்லாம் நல்ல தமிழ் வேண்டும். இதனை உணர்ந்து தமிழில் திறன் பெற பயிற்சி எடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். அதிலும் இன்றைய அறிவியல் உலகத்திற்கு ஏற்றாற்போல் தமிழைக் கொண்டுசெல்ல வேண்டிய கட்டாயம் இருக்கிறது.

### இலத்தீனம்

இக்கால மொழிகளைப் படிக்கும் முறைக்கு முதல் எடுத்துக்காட்டாகக் கி. பி.17ஆம் நூற்றாண்டில் தொடங்கப்பெற்ற இலத்தீன மொழிக்கல்வியே என்று குறிப்பிடுகின்றனர். பல நூற்றாண்டுகள் இலத்தீனம் மேலை நாடுகளில் கல்வி, வணிகம், சமயம், ஆட்சி ஆகியவற்றில் ஆட்சி செலுத்திய மொழியாக இருந்துள்ளது. 16ஆம் நூற்றாண்டின் இறுதியில் இலத்தீன மொழி ஆட்சியைப் பிரஞ்சு, இத்தாலி, ஆங்கிலம் ஆகிய மொழிகள் அகற்றி அவ்விடத்தை இம்மொழிகள் பெற்றுவிட்டன. முறையான தமிழ் மொழிக்கல்வி சென்ற நூற்றாண்டில்தான் தொடங்கப்பெற்றது. அதற்கு முன் அது திண்ணைப் பள்ளி என்றாற்போன்று தனிப்பட்டவர் முயற்சியாகவே இருந்துள்ளது. மொழித்திறனுக்காகப் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தமிழ் மொழிக்கல்வி அளிக்கப்படுகிறது. மொழிக்கல்வியின் நோக்கமும் மொழியைச் சிறப்பாகக் கையாளக்கூடிய திறனை வளர்ப்பதாகவே இருக்கிறது. பேசுதல், கேட்டல், எழுதுதல், படித்தல் ஆகிய நால்வகையிலும் திறன் பெறும் வகையிலேயே பாடத்திட்டம் அமைந்துள்ளது. இந்நால்வகைத் திறன்களையும் ஒருங்கே பெற்றோர் பயன்படுத்தும் மொழியே நல்ல தமிழ் என்று கொள்வது பொருத்தமுடையதாக இருக்கும்.

தொடர் பயிற்சியினால் ஒருவரது மொழிப்பயன்பாடு நாளுக்கு நாள் வளமை பெறுவதற்கு இடமுண்டு. அவரது தொடக்கக்கால மொழியைக் காட்டிலும் பிற்காலமொழி வளமையாக இருக்கும்.

இந்நிலையில் அவர் பயன்படுத்திய மொழி தொடக்க முதலே நல்ல தமிழாகத் தான் இருக்கிறது. அவரது பிற்கால வளமை பெற்ற மொழியும் நல்ல தமிழே. ஆகையால் நல்லதமிழ் என்பது வழுவில்லாமல் இருப்பதை மட்டும் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். உவமை, உருவகம் போன்றவற்றுடன் சிறந்திருப்பது கூடுதலான மொழித்திறன் எனக்கொள்ளுதல் சரியாக இருக்கும். ஆக நல்ல தமிழுக்குக் கீழ் எல்லை என்ற ஒன்று உண்டு. அதன் மேல் எல்லைக் குறிப்பிட்டுச் சொல்ல இயலாது எனக்கொள்வது பொருத்த முடையதாகும்.

## மொழித்தேர்ச்சி

"சொற்றான் இரண்டு வகைப்படும் தனிமொழியும் தொடர்மொழியும் என. அவற்றுள் தனிமொழியாவது சமய ஆற்றலால் பொருள் விளங்குவது. தொடர்மொழியாவது அவாய்நிலையானும், தகுதியானும், அண்மை நிலையானும் இயைந்து பொருள் விளங்கும் தனி மொழி ஈட்டம். பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும் இடைச்சொல்லும், உரிச்சொல்லு மெனத் தனிமொழி நான்கு வகைப்படும். இரு மொழித் தொடரும் பன்மொழித் தொடரும் என தொடர்மொழி இரண்டு வகைப்படும்" (தொல்.சொ.1 சேனாவரையர்) என்றாற் போன்று வரும் அடிப்படை இலக்கணத்தை அறிந்து கொண்டால் எளிமையாக நல்ல தமிழ்த் திறனைப் பெற்றுவிடலாம். செய்யுள் இயற்றுவதற்கு யாப்பிலக்கண அறிவும் மொழித் தேர்ச்சியும் தேவை. உரைநடைக்கு மொழித் தேர்ச்சி மட்டும் போதும். இவை இரண்டிற்கும் அடிப்படை நிலைக்களனாக இருக்கும் பேச்சு நல்ல பயிற்சிக் களமாக அமையுமாறு பார்த்துக்கொள்ளல் எளிமையாக மொழித்திறன் பெற வழிவகுக்கும்.

குறிப்பு: சேனாவரையர் குறிப்பிடுவது போல் சமய ஆற்றலால் சொல்லுக்குப் பொருள் ஏற்படவில்லை. மாந்தனால் உருவாக்கப்பட்டது சொல். சொல்லும் பொருளும் உடலும் உயிரும் போல் இயைந்து இருக்கும்.

"மாந்தன் ஒரு காலத்தில் பேசாத நிலையினனாக இருந்துள்ளான். அப்பொழுது அவனுக்கு உடல் சைகைகள், முகத்தோற்ற மாற்றங்கள் ஆகியவற்றைக் கொண்டுதான் தொடர்பு கொள்ளும் வழிமுறை இருந்துள்ளது, இறுதியாக, விரல்களால் சுட்டிப் பொருள் உணர்த்த முடியாத அளவிற்குக் கருத்துகள் பெருகியபோது, தொடர்பாளர்களுக்கிடையே ஒப்பந்தம் ஏற்படுத்திப் பொருள் வரையறையுடன் கூடிய செயற்கை அறிகுறிகளைக் கண்டுபிடிப்பது தேவை என்பதை அவர்கள் அறிந்துகொண்டனர்" (₹Max Muller 1965:28). மொழி இறைவனால் உருவாக்கப்பட்டது என்னும் கருத்து ஒரு காலத்தில் இருந்து வந்தது. அவ்வடிப்படையிலேயே தனிமொழி சமய ஆற்றலால் பொருள் விளங்குவது என்று கூறும் நிலை ஏற்பட்டுள்ளது. ஆனால், இக்கால மொழியறிவியல் மொழி மாந்தனால் உருவாக்கப்பட்டது என்பதை ஐயத்திற்கு இடமின்றி நிறுவியுள்ளது.

## குறிப்புதவி நூல்கள்


1.) தொல்காப்பியம், சேனாவரையருரை

2.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்). 2000, இயற்றமிழ் இலக்கணம், தமிழ்மண் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு 1940

3.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்), 2000அ, சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் தமிழ்மண் பதிப்பகம், சென்னை. முதற்பதிப்பு 1949

4.) பாவாணர் (ஞா.தேவநேயப் பாவாணர்), 1968, தமிழ் வரலாறு நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி

5.) Gleason, H.A., 1974, An Introduction To Descriptive Linguistics, Oxford & IBH Publishing House, New Delhi

6.) Max Muller, F., 1965 Lectures on the Science of Language, Munshi Ram Manohar Lal, Delhi, (first published 1861)

7.) Vallins, G.H., 1975, Best English, ELBS, London, First published 1960

# ஐ என வியக்க வைக்கும் தமிழ் ஐ


இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா




"ஐவியப் பாகும்" ( தொல்: 385) என்கிறது தொல்காப்பியம்.

இதன் பொருள் ஐ என்பது வியப்பாகிய குறிப்பை உணர்த்தும் என்பதாகும்.

வியப்பாக ஒன்றைக் காண்கிற பொழுது ஐ என ஒலிக் குறிப்பை நாம் எழுப்புவோம். மலை உயர்வானது. உயர்ந்த மலை வியப்பாகியது. எனவே ஐ எனின் உயரம் என்று பொருளாகியது. உயர்வைக் குறித்த ஐ ஆங்கிலத்தில் high என வழங்குகிறது. Highland என்பது அதனால்தான் .

உயிர் எழுத்துகளில் நெடில் ஏழில் ஐ ஒன்றாக அமையும்.

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ,ஓ, ஔ

என அமைந்துள்ள பன்னிரண்டு உயிர் எழுத்துகளில். ஆ, ஈ, ஊ எனும் நெடில்களே மூலமானவை. அவற்றின் குறில்களே அ, இ, உ எனும் மூன்று சுட்டுகள். மற்றவை இவற்றின் திரிபுகளாவும் ஒலிக் கூட்டுகளாவும் அமைந்தவை.

ஆ > சேய்மையைச் சுட்டும்
ஈ > அண்மையைச் சுட்டும்
ஊ > முன்மையைச் சுட்டும்

பண்டை மாந்தன் நெட்டொலிகளாகவே தன் உணர்வுகளை வெளிப்படுத்தினான். அஃது இயற்கையும் ஆகும்.

இருப்பினும் தமிழ் நெடுங்கணக்கில் ஒரு மாத்திரை அளவான குறிலுக்கு அடுத்தே இரண்டு மாத்திரை அளவான நெடில் வைக்கப்படும். ஒன்றுக்கு அடுத்து இரண்டு எனும் வைப்பு முறையே அது.

அ> ஆ எனத் திரிந்தது
இ> ஈ எனத் திரிந்தது
உ> ஊ எனத் திரிந்தது.
ஈ>>>>ஏ எனத் திரிந்தது
ஏ> எ எனக் குறுகியது
ஊ>>> ஓ எனத் திரிந்தது
ஓ> ஒ எனக் குறுகியது

இவற்றைத் தவிர்த்து

அ + இ = ஐ எனப் புணரொலியாகியது.
அ + உ = ஔ எனப் புணரொலியாகியது.
இதனைத் தொல்காப்பியம்

அகர இகரம் ஐகார மாகும் ( 54)
என்றும்

அகரம் உகரம் ஔகார மாகும் ( 55)
என்றும் கூறுகிறது.

உயிர்க்குறில் 1 மாத்திரை
உயிர்நெடில் 2 மாத்திரை

புணரொலிகளாகிய ஐயும் ஔவும் 2 மாத்திரைகளாகும்.

ஐ உயிரில் புணரொலியாயினும் தனிச்சொல்லாகவும் பொருளுடையதாகவும் விளங்குவதைச் சொற்பொருள் ஆராய்ந்தால் புலப்படும் .

உல்= நுண்மை பொருள் வேர். இது துளைத்தல் கருத்தால் விளைந்தது. துளைக்கத் துளைக்கப் பிளக்கும். பிளக்கப் பிளக்கச் சிறுக்கும்; சிறுக்கச் சிறுக்க நுண்மையாகும்.

உல்>அல்> அய்= நுண்மை
அய்>ஐ= நுண்மை

நுண்மை: "அணுத் தரும் தன்மையில் ஐயோன் காண்க" (வாச:3:45).

அய்> அயிர்= நுண் மணல்
அய்>அயிரை= நுண் மணலில் மறைந்திருக்கும் மீன்.

ஐ என்பது வியப்பாதலால் வியப்பு உயர்வுமாகும்.
அதே வேளை, உல் சேர்தல் பொருள் வேராகவும் இருப்பதால் சேரச் சேர பெருமையுமாகும். பெருமையும் வியப்பும், தலைமையுமாகும்.

ஐ = தலைமை; தலைவன்; கணவன்.

ஐ (பெ) 1. கணவன்: "எனக்கும் ஆகாது என்னைக்கும் உதவாது" (குறு:27:3).

2. அழகு: "வாங்கு கதிர் தொகுப்பக் கூம்பி ஐயென" (குறு:376:4).

3. ஐந்து என்பதன் விகாரம்: "நாறு ஐங் கூந்தல் கொம்மை வரி முலை" (அக: 65:18).

4. வியப்பு: "வெந்து ஆறு பொன்னின் அந்தி பூப்ப ஐயறிவு அகற்றும் கையறு படரோடு' (அக:71:6–7).

ஐ இய (12வி) வியக்கத்தக்க. "செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக் கண் ஐஇய கலுழும் மாமையர்" (மது:412–3).

5. தலைவன்: "அணங்கு அருங் கடுந் திறல் என்னை" (புற:78:2–3), "என்னை முன் நில்லன்மின் தெவ்விர்" ( குறள் : 771)

என் + ஐ = என்னை

ஐ இய(ன்) (பெ) தலைவ(ன்): "எல்லும் எல்லின்று ஞமலியும் இளைத்தன செல்லல் ஐஇய உது எம் ஊரே" (5:179:2–3).

1. கோழை எனும் சிறுமை : "ஐயினால் மிடறு அடைப்பு உண்டு" (நாவு:6:61:7).
2. கவ நோய்: "அன்று தொட்டு இவன் ஐம் முதல் பிணியினால் அழுங்கி" (வி.பா:1:28).
3. இளி என்னும் இசைக்குரிய எழுத்து: "ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ எனும் இவ் வேழ் எழுத்தும் ஏழ் இசைக்கு உரிய" (நிக.தி:10:159).
4. அரசன்: "ஐ அழகு இடைச் சொல் கோழை அரசனொடு இருமல் சாமி" (நிக.சூ:11:162)

5. தொழிற்பெயர் விகுதி: "ஐது தொடை மாண்ட கோதை போல" (குறு:62:3). முன்னிலை ஒருமை விகுதி: "நீ கண்டனையோ கண்டார்க் கேட்டனையோ" (குறு: 75:1). வினை முதற் பொருள் விகுதி: "கொடுஞ் சிறைப் பறவை இறை உற ஓங்கிய நெறி அயன் மராத்த" (குறு:92:2–3).

6. சாரியை: "இன்றை அன்ன நட்பின்" (குறு:199:6).

7. ஒலிக் குறிப்பு: "சேற்று நிலை முனை இய செங்கட் காரான் நள்ளென் யாமத்து ஐ எனக் கரையும்" (குறு:261:3–4).

8. விரைவுக் குறிப்பு: "செவ் வாய் வானத்து ஐயெனத் தோன்றி இன்னாப் பிறந்தன்று பிறையே" (குறு:307:2–3).

9. செயப்படு பொருள் விகுதி: "சில் அவிழ் மடையொடு சிறு மறி கொன்று" (குறு:362:3–4).

10. தாமரை எண்ணின் இறுதி எழுத்து: "ஐ அம் பல் என வரூஉம் இறுதி அல் பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்" (தொல்:8:98).

11. பண்புப் பெயர் விகுதி: "வல்லொற்றுத் தொடர் மொழி வல்லெழுத்து வருவழி தொல்லை இயற்கை நிலையலும் உரித்தே" (தொல்:9:4).

12. பகுதிப் பொருள் விகுதி: "வண்ண வண்டு இமிர் குரல் பண்ணை போன்றனவே" (பரி: 14:4).

13. ஐ ஆயுதன் (பெ) திருமால்: "வேங்கடத்துள் நின்றவன் அத்தத்து ஐ ஆயுதன்" (அட்:6:50).

14. ஐ ஆனவன் (பெ) சிவன்: "ஐ ஆனவன் இயல் வாணனை அடிமை கொள்" (வி.பா:7:17).

15. ஐ எனல் (இ) விரைவுக் குறிப்பு: "ஞெள்ளல்...ஐ எனல்... விரைவுக் குறிப்பே" (நிக . தி:9:42).

இவை ஐ குறித்த இலக்கியச் சுட்டுகள்.

தந்தை பெரியார் உயிரெழுத்துகளில் ஐ ஔ இரண்டையும் எழுத்துச் சுருக்கங் கருதி அய் அவ் என மாற்றினார். உயிர் எழுத்துகளில் இவ்வாறு மாற்றுவதை அறிஞர்கள் ஏற்கவில்லை.
ஐயா> அய்யா என்றும்
ஔவை> அவ்வை என்றும்
எழுதப்பெற்று வருகின்றது. .

இவ்வாறு எழுதுவதை எழுத்துத் திருத்தத்தால் எழுதுதப்படுவதாகச் சிலர் கருதுகின்றனர். அது தவறாகும் ஐயாவின் போலியே அய்யாவாகும் அதுபோல் ஔவையின் போலியாக அவ்வை அமையும் . இஃது இலக்கண விளக்கமே.

ஆனால்
சொல்லாராய்ச்சி முறைப்படி
அம்மையே அவ்வை ஆகியது.
அம்மை> அவ்வை
அம்மா> அவ்வா
அவ்வை> அவ்வா>அவ்வாள்
அம்மை>அம்மா>அம்மாள்

ஐ பற்றிய சிறு ஆய்வினை வேர்ச்சொல் அமைப்பு முறையிலேயே நான் பார்க்கத் துணிந்தேன். ஐ உயிர் நெடில்களில் ஒன்றென்பது நாம் அறிந்ததே. உயிர் ஒலிகளில் ஒன்றாக இஃது எவ்வாறு இடம்பெற்றது என்பதை இலக்கணச் சான்றோர் தெளிவாகவே விளக்கியுள்ளனர் . எழுத்துச் சீர்மை எனும் பெயரில் பெரியார் மாற்றியமைத்த அய்க்கும் இதற்கும் தொடர்பிருப்பதாகத் தெரியவில்லை.

அவர் எழுத்துச் சுருக்கங் கருதி ஐ வேண்டுவதில்லை என்றார். உயிர் எழுத்துகளில் எழுத்துச் சுருக்கம் வேண்டுவதில்லை என்பதே நம் கருத்தும். பெரியாருக்கு முன்பதாகவே வீரமாமுனிவர் தொல்காப்பியப் பாடல் வரிகளுக்கு மாறாக எகர ஒகரங்களில்

மாற்றம் செய்தார்.

"மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்
எகர ஒகரத் தியற்கையும் அற்றே"
(தொல். எழுத்து. 16)

தொல்காப்பிய காலத்தில் எகரமும் ஒகரமும் மெய் போல மேலே புள்ளி வைத்து எழுதப்பெற்றது. புள்ளி அகற்றினால் ஏகாரம் ஓகாரம் ஆகிவிடும். வீரமாமுனிவர்தான் இன்றைய வழக்கில் மாற்றியமைத்தார்.

பிற்காலத்தில் பெரியார் பல்வேறு மாற்றங்களைக் கொணர்ந்தார். அவற்றுள் அய் அவ் தவிர்த்து ஏனைய பதின்மூன்று மாற்றங்களைத் தமிழ்நாட்டு அரசு அறிவித்த அறிஞர் குழுவால் ஏற்றுக் கொள்ளப்பெற்றுப் படிப்படியாக நடைமுறைக்கும் வந்து விட்டது.

மலேசியாவில் 1982 க்குப் பிறகு நடைமுறை முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட பொழுது எமது மலேசியத் தமிழ்நெறிக் கழகம் கடுமையாக எதிர்த்தது. அக்கால் இடைநிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த வேளையிலும் அதன்பிறகு ஆசிரியப்பணியில் ஈடுபட்டிருந்த வேளையிலும் எழுத்துச் சீர்மையை எதிர்த்து நான் ஊடகங்களில் வலுவான அறிக்கைகளை விடுத்தேன். எம் பேராசான் பாவலர் திருமாலனார் தலைமையில் நாடுதழுவிய அளவில் நடத்தப்பெற்ற எழுத்துச் சீர்மை தொடர்பான கூட்டங்களில் முதன்மைப் பேச்சாளராக அமைந்து நீண்ட விளக்கங்களையும் வழங்கியுள்ளேன். அக்கால் பாவாணர், பாவலரேறு பெருஞ்சித்திரனார், ஈழத்துப் பூராடனார், வ.சுப. மாணிக்கனார், முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ.விசுவநாதம் முதலானோரின் விளக்கங்கள் எமக்குப் பெருந்துணையாக விளங்கின. இப்பெருமக்களுள் ஈழத்துப் பூராடனாரின் விளக்கம் ஏரணவியலாய் விளங்கியது. அக்கால் கணினிக் காலத்தின் தொடக்கமாகையால் அன்னாரின் விளக்கம் கணினித் தட்டமைப்புத் தொடர்பான அரிய, எளிய விளக்கமாக அமைந்து நமக்குத் தெளிவைத் தந்தது. எழுத்துச் சீர்மையை வலியுறுத்தும் அறிஞர்கள் அனைவரின் ஆய்வுகளையும் தெளியப் படித்தேன். பெரியாரின் எழுத்துச் சீர்மை தொடர்பான நூலை முழுமையாக ஆய்வு செய்தேன். எழுத்துச் சீர்மை தொடர்பான முரண்பட்ட பல்வேறு வடிவங்கள் குழப்பம் மிகுந்தவையாய் இருந்தமையால் அவற்றில் எனக்கு உடன்பாடில்லை. பெரியாரைத் தவிர்த்து ஏனையோர் சிலர் கொண்டு வந்த எழுத்துத் திருத்தங்கள் இன்னுஞ் சிக்கலானவை.

ஆனால் காலவோட்டத்தில் பெரியார் முன்மொழிந்த 13 எழுத்துத் திருத்தங்களே அறிஞர் அளவிலும் அரசு நிலையிலும் கல்விக்கூடங்களிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன.

இவை மொழி நிலையில் எவ்வகையான கேட்டினையும் தராமையால் அறிஞர் அனைவரும் ஏற்ற நிலையில் நானும் ஏற்றுக்கொண்டேன். இந்நிலையில் வரட்டுப்பிடி தேவையற்றதாக எனக்குப்பட்டது. இக்கால் எவ்விடத்தும் இவ்வெழுத்துப் பயன்பாடுகளே.

இந்நிலையில் ஐ> அய் , ஔ> அவ் என மாற்றப் பெற்று இவற்றோடு புணர்ந்த ஏனைய உயிர்மெய்களையும்

மாற்றுவது ஏற்புடையதன்று. ஆனால் தொல்காப்பியம் கூறும்

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத்
தோன்றும்" ( தொல். எழு. 56)

எனும் நூற்பாவிற்கும் இந்த எழுத்து மாற்றத்திற்கும் தொடர்பில்லை என்பதை முன்பே நான் விளக்கியுள்ளேன்.

ஒலிப்பு முறையில் ஐ அய் யாகவும் ஔ அவ் வாகவும் வரும். ஐவனம் அய்வனம் எனவும் வரும். இது தொல்காப்பிய உரை விளக்கம் தரும் செய்தியாகும் . ஐ, ஔ சில இடங்களில் மாத்திரை குன்றியும் ஒலிக்கும். இதுவும் தொல்காப்பியம் தரும் செய்தியே. இவற்றை ஐகாரக் குறுக்கம் என்றும் ஔகாரக் குறுக்கம் என்றும் கூறுவர்.

'ஓரள பாகும் இடனுமா ருண்டே
நேருங் காலை மொழிவயி னான'
(தொல்.எழுத்து: 57)

என்பது தொல்காப்பியம் . இது இடைச்செருகலன்று. தொல்காப்பிய ஆய்வறிஞர்கள் 56, 57 பாடல் வரிகளை இடைச்செருகல்கள் என எவ்விடத்தும் கூறவில்லை.

ஐப்பசி, கைப்பை, இடையன், குவளை முதலான சொற்களில் ஐகாரம் ஒரு மாத்திரையளவு செய்யுளில் இடன்நோக்கிக் குறுகும் என்பது நச்சினார்க்கினியர் உரை.

புறப்பொருள் வெண்பாமாலையில்
' கவ்வைநீர் வேலி ( 4–23)
எனத் தொடர்பயில்வதை நச்சினார்க்கினியம் கூறுகின்றது. இங்குக் கௌ > கவ் ஆகிற்று. ஆனால் சொல்லாராய்ச்சியில் கவ் என்பதே மூலமாகும் என்பது புலப்படும்.

வாயை அங்காந்து பின்னர் மூடி ஒரு பொருளைப் பற்றிக் கொள்வதை அவ்வுதல் என்போம்.
ஆ> அவ்> அவ்வு
நாய் வாயில் எலும்புத் துண்டை அவ்விக் கொண்டிருக்கிறது என்பது வழக்கு .

அவ்வு க கர ஒற்று சேர்ந்து கவ்வு என்றும் வகர ஒற்று சேர்ந்து வவ்வு என்றும் மாறும்

அவ்வு >கவ்வு
அவ்வு > வவ்வு

நாய் அவ்வியது
நாய் கவ்வியது
நாய் வவ்வியது

அவ் ஔ எனவும்
கவ் கௌ எனவும்
வவ் வௌ எனவும் திரியும்

பேராசிரியர் சி.இலக்குவனார் தம் தொல்காப்பிய ஆராய்ச்சி எனும் நூலில்
,
" ஐ, ஔ இவை இரண்டும் ஒவ்வொன்றும் இரண்டு ஒலிகளால் ஆனவை. ஐ என்று ஒலிப்பதற்கு அ இ என்றோ அய் என்றோ எழுதி ஒலிக்கலாம். ஔ என்று ஒலிப்பதற்கு அ உ என்றோ அவ் என்றோ எழுதி ஒலிக்கலாம். தொல்காப்பியரே இவ்வாறு கூறுகின்றார். பாடல்களில் எதுகை நோக்கி அய்யன் என்றும் அவ்வை என்றும் பயின்றிடக் காணலாம் "
( தொல்காப்பிய ஆராய்ச்சி பக்: 42–43)

என இந்தக் கருத்துக்கு முட்டு கொடுக்கின்றார். ஆனால் அவரும் உயிர் எழுத்தில் மாற்றம் கொணர்வதை ஏற்கவில்லை.

இனி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் ,

'ஐ' என்பதே ஒப்பமுடிந்த வரிவடிவம் எனினும் தொன்முது காலத்தில் தமிழ்மொழி உருவெழுத்தாகவும் அசையெழுத்தாகவும் எழுதப்பட்டுவந்ததால், 'அஇ' என்னும் கூட்டுயிர் 'அய்' என மாற்றுக் கூட்டுயிர் வடிவம் பெற்றது. இதனை (அஇ), (அய்) என்னும் சிந்துவெளியில் கிடைத்த எழுத்துகளாலும் அறியலாம். "அகரத்திம்பர் யகரப் புள்ளியும் ஐயென் நெடுஞ் சினை மெய்பெறத் தோன்றும்" (தொல்.எழுத். 56) எனத் தொல்காப்பியர் நூற்பா இயற்றினார். ஆதலால் இது இலக்கண வழக்கன்று என்பதும் உலகியல் வழக்கை ஒருபுடை தழுவிய தன் நோக்கம் பண்டையோர் ஏட்டுச்சுவடிகளில் உள்ள எழுத்துப்பாங்கு பின்னையோர்க்குப் புலப்படுத்தற்கே என்பதும் அறிதல் வேண்டும்.

அசையெழுத்துக்காலத்தில் தமிழில் நெட்டுயிர் அனைத்தும் இரு உயிர்க் குறில்களின் இணைப்பெழுத்துகளாக எழுதப்பட்டன.

எ – டு:

அஅ → ஆ;

இஇ → ஈ;

உஉ →ஊ ;

எஎ > ஏ (அல்லது)

இஅ → ஏ;

அஇ → ஐ அல்லது அய் → ஐ;

ஒஒ → ஓ அல்லது உஅ → ஓ;

அஉ ஔ அல்லது அவ் ஔ.

ஏகார ஐகார ஓகார ஔகாரங்களை ஈரெழுத்துக் குறில்களாக எழுதாமல் ஓரெழுத்து நெடிலாக எழுதும் முறையை இலக்கண வல்லுநர் புகுத்தியபோது பண்டைய ஈரெழுத்து நெடில்களுக்கு இலக்கண அமைதி கூறுவதற்காகவே தொல்காப்பியர் அகரஇகரம் ஐகாரம் ஆகும் என்றார். நெட்டுயிர்களை "ஈரள பிசைக்கும் நெட்டெழுத்தென்ப" எனக் குறிப்பிடுவதும்; இருகுறில் இணைந்து நெட்டுயிர் வரிவடிவம் பெறும் என்னும் பண்டைய அசையெழுத்து நிலையைக் குறிப்பால் புலப்படுத்துவதாகும் எனத் தெளிவிக்கின்றது.

செந்தமிழ்ச் சிவணிய பன்னிரு நிலத்தும் மக்கள் வழக்கே செவ்வையாகி.. ஆயிரு வழக்குகளில் ஒன்றாய் வழங்கியது எனலாம்.

தமிழ்கூறு நல்லுலகத்து "வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்" என்பது தொல்காப்பியப் பாயிர வரியாகும்.

மொழிவழக்குகள் இரண்டு. ஒன்று மக்கள் வழக்கு. மற்றொன்று நூல் வழக்கு. இந்த இரண்டுமே மொழியின் நிலைப்பாட்டிற்குஇன்றியமையாதவை யாகும். நூல் வழக்கு அல்லது செய்யுள் வழக்கு மக்கள் வாழ்வியலை நெறிப்படுத்தவும் மக்கள் வாழ்வியலுக்குள் வழங்குகின்ற தூய வழக்காற்றுகளைத் தொகுத்து வைக்கவும் கட்டமைக்கப்பெற்றதாகும். நூல் வழக்கு நெறிப்படுத்திய வழக்கினை மக்கள் வழக்கு வாழ்வியலுக்குள் இயைந்து அதை நடைமுறைப்படுத்திக் கொண்டிருக்கும். எனவே, இரண்டுமே மொழி வாழ்வுக்கும் மக்கள் வாழ்வுக்கும் மிகவும் அடிப்படையாக இருக்கின்றன. ஒரு மொழி உயிராறு போல் என்றும் விளங்க வேண்டுமானால், மக்கள் வழக்கு, நூல் வழக்கு ஆகிய இரண்டு வழக்கும் இணைந்து இயங்கல் வேண்டும். மக்கள் வழக்கு ஒழிந்தால், அம்மொழி உயிருள்ள மொழியாகக் கருதப்படமாட்டாது. ஆதலால், இருவகை வழக்குகளையும் ஆய்ந்தே தொல்காப்பியம் இயற்றப்பட்டுள்ளது

என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகு மயங்கா மரபு நோக்கின் ஒலிக் குறிப்பும், வேர் நுட்பமும் இயைந்தே ஐகாரம் தோற்றம் பெற்றுள்ளது என்பது தெளிவுறும். வேர் நிலையில் உல் > அல் > அய் > ஐ என்பதே முறை. உணர்ச்சியொலி பலுக்கலால் ஐ என ஒலிப்பதும் இயல்பே. அதே பலுக்கலால் இஃது அய் எனவும் ஒலிக்கும் என்பதுவும் இயல்பே.

## இலக்கண உருபில் நுட்பமாய் அமைந்த ஐ

ஐ – இரண்டாம் வேற்றுமை உருபு:
"சில் மொழி
அரிவையைப் பெறுகதில் அம்ம
யானே" (குறு:14:2–3).

உல் > சேர்தல், கூடுதல் கருத்து வேர்.
உல்>அல்> அய்> ஐ
ஒரு தொடரில் செயற்படுபொருளாக விளங்கும் ஒரு பொருளின் பால் செயற்பாடு நிகழ்த்தப்படுதலான் சார்ந்து நிகழ்தல் கரணியமாய் ஐ எனும் வேற்றுமை கூறப்பெற்றது. எதன் மீதோ, எவர் மீதோ ஒரு வினை பிறிதொன்றால் பிறிதொருவரால் நிகழ்த்தப்படும் வினை அப்பொருளை விடுத்து நிகழாது. அப்பொருளைச் சேர்ந்தே வினை நிகழும். எனவே ஐ எனும் இரண்டாம் வேற்றுமை உருபு சேர்தல் பொருளில் அமைந்தது.

"இரண்டா குவதே ஐயெனப் பெயரிய
வேற்றுமைக் கிளவி எவ்வழி வரினும்
வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலின் தோன்றும் அதுவே"
(தொல்.சொல். 71)

எனத் தொல்காப்பியமும்
இரண்டா லதனுரு பையே
அதன்பொருள்
ஆக்க லழித்த லடைதல் நீத்தல்
ஒத்தலுடைமை யாதி யாகும்."
என நன்னூலும் கூறுகின்றன.

ஆக்கல் பொருள், அழித்தல் பொருள்
அடைதல் பொருள், நீத்தல் பொருள்
ஒத்தல் பொருள், உடைமைப் பொருள்
என ஐயால் விளைந்த பொருள் விளக்கமே இவை.
ஆகுதல் சேரச் சேர ஆக்கம் பெறும். இதனால் ஐ ஆக்கப் பொருளாயிற்று.

அழித்தல் பொருள் ஒன்றினின்று ஒன்று விலகி மற்றொன்றில் சேர்ந்து ஆகும். பிறிதொன்றில் சேர்வது மற்றொன்றிலிருந்து தேய்ந்துப் பிரியும் சிதையும்.
அடைதல் பொருள் ஓரிடத்தினின்று விலகி பிறிதோரிடத்தில் சென்று சேரும். சேர்வது அடைதலுமாகும்.
நீத்தல் பொருள் ஓரிடத்தில் சேர்வது மற்றோரிடத்தினின்று விலகலாகும். விலகி நீங்கலே நீத்தல்.
ஒத்தல் பொருள் ஒன்றுடன் சேர்வது அதனுடன் ஒத்துப் போகும், ஒத்துப் போவது அது போன்றதாகி விடும்.
உடைமைப் பொருள் ஒன்றுடன் சேர்ந்தது அதற்கு உரிமையாய் உடைமையாய் ஆகும்.

இப்படியே, உல் எனும் சேர்தல் கூடல் பொருள் வேர் ஐ எனும் சேர்தல் மூலப் பொருளாய் விரிந்து இரண்டாம் வேற்றுமை உருபாகியது.

ஐ எனும் தனித்ததொரு தூய தமிழ், தூய்மையாய், நுண்மையாய், அழகியலாய், எண்மையாய், தலைமையாய், பெருமையாய் வியப்புறுத்தும் பல்வகைத் தன்மையறிந்து நாம் இறும்பூதுகின்றோம்.
தமிழுக்கு ஐ என ஐ திருமை வாய்ந்தது. தமிழின் வேராய்வு ஐயையும் துளைத்து நுழைந்து நுண்மாண்பு காட்டும் திறனறிந்து ஐ என வியக்கின்றோம்.

# மலையியல் கலைச் சொற்கள்



இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்

மலை தொடர்பான நாற்பதுக்கும் மேற்பட்ட சொற்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன.

குறிஞ்சித்திணைப் பாடல்களில் இவை காணப்படுவதால் புவியியல், மலையியல் என்பன போன்று குறிஞ்சியியல் என்றே நாம் தனியியல் கண்டு பல கலைச்சொற்களைப் புதுப்பிக்க இயலும்.

சங்கச் சொற்களுக்கு இணையான ஆங்கிலச் சொற்களையோ பிறமொழிச் சொற்களையோ நாம் காண இயலாது. சான்றாக எதிரரொலிக்கும் மலையைச் சிலம்பு என்றனர். ஆனால், அத்தகைய வகைப்பாடு பிற மொழியாளரிடம் இல்லாததால் நாம் பொருள் விளக்கம்தான் அளிக்க இயலும். பின்வரும் சொல் ஒவ்வொன்றுமே கலைச்சொல் என்பதை உணர்ந்து உரிய துறை ஆசிரியர்கள் இவற்றைப் பயன்படுத்தி நூல்கள் எழுத வேண்டும்.

சங்க இலக்கியங்களில் சொல் பயன்படுத்தப்பெற்ற எண்ணிக்கை அடைப்பில் குறிக்கப்பெற்றுள்ளது.

அடுக்கம் (range) (72),
அடுக்கல் (range) (5),
அருப்பம் (small hill) (13),
அரைமலை (Middle of a mountain slope) (1),
அறை (huge rock) (78),
அறைவாய் (mountain pass) (1),
இகுப்பம் (large boulders, hillock) (1),
இறும்பு (foothill) (21),
ஏகல் (high hill) (3),
ஓங்கல் (mountain top) (13),
கடறு (mountain slopes) (9),
கது (mountain cleft)(8),
கல்(rock) (245),
கல்லளை (mountain caves) (3),
கவாஅன் (slopes) (32),
கன்முழை (mountain cavern)(1),
கிழிப்பு (mountain cleft) (1),
குடுமி (Summit or peak of a mountain ) (26),
குவடு (Hillock ) (1),
குன்று ( mountain) (180),
கோடு(Summit of a hill ),(hill) (167),
சாரல் (mountain slopes)(99),
சிகரம் (peak)(1),
சிமையம் (peak) (2),
சிலம்பு (mountain which has resound or echo) (128),
சென்னி (peak) (44),
நவிரம் (peak) (2),
பிளப்பு (mountain cleft) ,
பிறங்கல்(hillock ) (20),
பெருங்கல்(rock ) (28),
பொறை(small hill) (51),
மலை(mountain) (337),
முகடு (peak) (5),
முகை(mountain cave) (134),
வசி (mountain cleft) (8),
வரை(big mountain) (379),
விடர் (mountain cleft) (33),
விடரகம் (mountain caves) (29),
விடரளை (Cleft in a mountain cave) (1),
விண்டு (mountain) (8),
விலங்கல் (blocking mountain) (3)
வெற்பு (hill) (20),

முதலானவை அனைத்தும் மலையியல் கலைச் சொற்களே!

# கள்ளி முள்ளி !



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

"ஆடலுடன் பாடலைக் கேட்டு
ரசிப்பதிலே தான் சுகம் சுகம் சுகம்
ஆசை தரும் பார்வையிலெல்லாம் ஆயிரம்
எண்ணம் வரும் வரும் வரும் ....
கள்ளிருக்கும் மலரே வளைந்தாடு
களைப்பாற மடியில் இடம்போடு
உள்ளிருக்கும் நினைவில் உறவாடு
உலகையே மறந்து விளையாடு.."
(ஆலங்குடி சோமு, குடியிருந்த கோயில்).

*****

"வெள் எருக்கஞ் சடைமுடியான் வெற்பு எடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடனின்றி உயிர் இருக்கும் இடம்
நாடி இழைத்த வாறோ?
கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள்ளிருக்கும்?" எனக் கருதி உடல் புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி?"
(யுத்த காண்டம் – இராவணன் வதைப் படலம்: 10082).

கள் இருக்கும் மலரைச், சூடிய சானகியா? மலரைச் சூடிய, கள் இருக்கும் சானகியா? 'கள்இருக்கும்' என்பது மலர்க்கூந்தலுக்கு அடையாக நிற்பதுடன் சானகியையும் தழுவிநின்று இன்பம் தருவதை (இரட்டுற மொழிதலாக) உணரலாம்.

"உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு"

கள் மனமயக்கும் மது எனப் பொருளாவது போலவே வேறு பொருள்களும் தரும்!

அள் = கூர்மை (திவாகரம்).
அள் – அர் – அரி – அறு.
இல் = சிறிய.
இல் – இள் – சிறிதாகத் தேய்ந்து இறும் போது கூர்மையாகும்.
இல் – இள் – இண்டு – இடுக்கு,
இண்டை – முட்செடி.

அள் – வள் = வை = கூர்மை.
வள்ளுகிர் = கூரிய நகம்.

"முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர"
(குறிஞ்சிப்பாட்டு: 131–132).

பொருள்: வேட்டை வாய்க்காததால் மகிழ்ச்சியில்லாத கண்களோடு வேட்டைநாய்கள் பல் தெரிய அவனைச் சூழ்ந்து வந்தன.

"கண்ட போதினில் வால்குழைத் தரியமெய்
கலங்கிக்
கொண்டு மென்மெல நடந்துதன் பெருஞ்சிரங்
குனிந்து
தண்ட ளிர்ப்பதத் தெரிசனைக் கெனச்'சலாம்'
உரைத்துத்
தெண்ட னிட்டது வள்ளுகிர்த் திண்டிறற் புலியே."
(சீறாப் புராணம், புலி வசனித்த படலம்: 763).

பொருள்: நபிகள் வருவதைப் பார்த்ததும், கூர்மை பொருந்திய நகங்களும் திண்ணிய வலிமையும் உடைய புலி, தனது வால் வளைத்து நடுக்கமுற்றுப் பையப் பைய வந்து தலையைத் தாழ்த்தியது.

வை = கூர்மை,
" ...... என்றும்
உண் டாயின் பதம் கொடுத்து,
இல் லாயின் உடன் உண்ணும்,
இல்லோர் ஒக்கல் தலைவன்,
அண்ணல்எம் கோமான், வைந்நுதி வேலே."
(புறநானூறு: 95).

வை > பை > pine > fine = கூரிய.
முள்ளந்தண்டு – spinal cord
பூந்தாழை – pineapple
முள்ளம்பன்றி – porcupine,
Latin porcus "hog" (from PIE root *porko– "young pig") + spina "thorn, spine".
* Fine: Of weapons or edges, "sharp" from c. 1400

சுள் – சுர் – சுரீர், சுருக் = குத்தல் உணர்வு.
கள் = கூர்மை, கூரிய முள்.
கள் – கர் – கருக்கு = கூர்மை, – பனங்கருக்கு.
'அரிவாள் கருக்காக இருக்கிறது' – மக்கள் பேச்சு வழக்கு.

கூரிய முட்கள் உடையது கள்ளி எனப்பட்டது.
"வள் எயிற்றுச் செந்நாய், வயவுறு பிணவிற்குக்
கள்ளியங் கடத்தினைக் கேழல் பார்க்கும்,
வெஞ்சுரக் கவலை நீந்தி
வந்த நெஞ்சம், நீ நயந்தோள் பண்பே."
(ஐங்குறுநூறு: 323).
கள்ளியம் கடம் = கள்ளிமரங்கள் நிறைந்த பாலை நிலம்.

"அள்ளிக்கொள்வு அன்ன குறுமுகிழ ஆயினும்
கள்ளிமேல் கைந்நீட்டார் சூடும்பூ அன்மையால்
செல்வம் பெரிதுடையர் ஆயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடை யார்."
(நாலடியார்: 262).

பொருள்: அள்ளிக்கொள்வது போலச் சிறிய அரும்புகளை உடையவையானாலும், அவை சூடிக்கொள்வதற்கு ஏற்ற மலர்கள் அல்லாமையால், யாரும் கள்ளி மரத்தின்மீது கை நீட்டமாட்டார்கள். அதுபோல, மிகப்பெரும் செல்வம் உடையவரானாலும் அவர் செல்வம் பயன்படாமையால் கீழ்மக்களை அறிவுடையோர் விரும்பிச் சேரமாட்டார்கள்

"பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும்
கானலிலே என்பேதை செல்லற் கியைந்தனளே –
மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாறாய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்குங் காடு."
(பொய்யாமொழிப்புலவர்).
கள்ளியே வறண்டு காய்ந்து பொறிபறக்கும் கானல்!

முட்களுடைய கள்ளி வகைகள் – 'cactus', இச் சொல்லுக்கு வேர் மூலம் தெரியவில்லை எனப்படுகிறது.
கள் (முள்) > கள்ளி > கடி > cactus.

"நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே
புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு
இனிய செய்தநம் காதலர்
இன்னா செய்தல் நோமென் நெஞ்சே!"
(குறுந்தொகை: 202).
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு = முன்னர்க் கண்களுக்கு இனிமையாகக் காட்சி தந்த சிறுநெருஞ்சிப் பூக்கள், இப்போது காயாக மாறி முள்ளாகக் குத்துகின்றதைப் போல.

கல் = திரட்சி, திரண்டு, உருண்டு உள்ள பாறை, மலை.
கல் – கள் – கண் > கணு > கணுப்போல் கூரிய முள்

உள் – (கள்) – சுள் – சுணை.

நெல் தாள், கரும்பின் தோகை போன்றவற்றின் ஓரங்களில் சிறிய முள் போன்றிருப்பது சுணை எனப்படும்.

கைதை / தாழை மடல், தாமரைத் தண்டு, இலவ மரம், இலந்தை மரம் போன்றவற்றில் சிறிதும் பெரிதுமாகப் புடைத்துக் கூரிதாய் முன் தள்ளியிருப்பது முள் எனப்படுகிறது.

"ஊ – உ – முள்
முள் = முன்சென்று பதி, நகத்தைப் பதி, பதியும் கூரான உறுப்பு.
முளவு = முள்ளம் பன்றி.
முட்டு = முற்சென்று தாக்கு.
முட்டை = முட்டி வருவது"
(பாவாணர் – வேர்ச்சொல் சுவடி) .
"கள் – முள்" – தேவநேயம், பகுதி 1.

"தேசத்திலே கொடியேற்றுங்கள்; ஜாதிகளுக்குள் எக்காளம் ஊதுங்கள்; ஜாதிகளை அதற்கு விரோதமாக ஆயத்தப்படுத்துங்கள்; ஆரராத், மின்னி, அஸ்கெனாஸ் என்னும் ராஜ்யங்களை அதற்கு விரோதமாகத் தளகர்த்தனுக்குப் பட்டங்கட்டுங்கள்; சுணையுள்ள வெட்டுக்கிளிகள்போன்ற குதிரைகளை வரப்பண்ணுங்கள்."
(விவிலியம், எரேமியா: 51 – 27).

சுணை = கூர்மையான முட்கள் போன்ற கொடுக்கு.

கள் = முள், கள்ளி = முள்ளுடையது,
முள்ளி = முட்கள் நிறைந்த செடி.

"கள்ளி ஏய்ந்த முள்ளி அம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பு இலாஅ அவி புழுக்கல்"
(புறநானூறு: 363).

"செங்கண்மால் தடக்கையிற் சங்கம் நாண
முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூர் அன்ப"
(துறைமங்கலம் சிவப்பிரகாசர், நால்வர் நான்மணி மாலை: 12).

முட்டாட்டாமரை = முள் + தாள் + தாமரை.

"முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்,
தடந் தாட் தாழை முள்ளுடை நெடுந் தோட்டு
அக மடல் பொதுளிய முகை முதிர் வான் பூங்
கோடு வார்ந்தன்ன, வெண் பூத் தாழை"
(நற்றிணை: 203)

தாழையின் மடல் முள்ளுடைத் தோடு எனப்படுகிறது.

"கொடுங்கழி மருங்கின் அடும்புமலர் கொய்தும்,
கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்"
(நற்றிணை: 349).

கைதை = தாழை > கேதை > கேதகம் (வ.)
தூக்கி = கையில் முள் தைக்காமல் மலரைத் தூக்கிப் பறித்து.

"முள் அரை இலவத்து ஒள் இணர் வான் பூ,
முழங்குஅழல் அசைவளி எடுப்ப, வானத்து
உருமுப் படு கனலின் இரு நிலத்து உறைக்கும்
கவலை அருஞ் சுரம் போயினர்
தவல் இல் அரு நோய் தலைத்தந் தோரே"
(ஐங்குறுநூறு: 320).

முள் அரை இலவம் = முள் இலவ மரம்.
கவலை = இரண்டு, மூன்றாகக் கவர்த்து (பிரிந்து) செல்லும் வழி.

"எள்ளுநர் போலும் இவர், என் பூங் கோதையை;
முள்ளுடைக் காட்டின் முது நரி ஆக' என–"
(சிலப்பதிகாரம்).

முதுநரி பார்வையின்றி முள்நிறைந்த காட்டில் துன்புறும்,

கள் – கடு – கடும் – கடி = கூர்மை.

"கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும்"

(நன்னூல்: 457)

கடி நுனைப் பகழி = கூரிய நுனியுடைய அம்பு.

கடுத்தேறு / கடுந்தேறு = கூரியதாய்க் குத்தும் / கொட்டும் குளவி.

"கடும் தேறு உறு கிளை மொசிந்தன துஞ்சும்
செழும் கூடு கிளைத்த இளம் துணை மகாரின்"

(பதிற்றுப்பத்து: 71).

அள் – கள் – வள் – தள் – தாள்!

தா – தாள் – stalk = கூரிய புல்லின்

தாள் = சுணையுடையது; தாளடி ; தாள் = கால்.

"ஈன்று புறந்தந்த எம்மும் உள்ளாள்,
வான் தோய் இஞ்சி நன்னகர் புலம்பத்
தனி மணி இரட்டும் தாள் உடைக் கடிகை,
நுழை நுதி நெடுவேல் குறும்படை மழவர்"

(அகநானூறு: 35).

தாள் உடைக் கடிகை = முட்டுவாயின் ஊடுருவச் செறிக்கும் கடையாணி.

தா – தாள் = வருந்திச் செய்யும் முயற்சி = தாளாண்மை.

'தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் '

திருக்குறள்.

"தாவே வலியும் வருத்தமும் ஆகும்"

(தொல்காப்பியம், உரியியல்: 46).

தா = தாள் = வருத்தம் (வலி தரக்கூடியது) > thorn.

cactus (n.)

c. 1600, in a classical sense, "cardoon, artichoke," from Latin cactus, from Greek kaktos, name of a type of prickly plant of Sicily (the Spanish artichoke), a "foreign word of unknown origin" [Beekes]. In reference to the green, leafless, spiked American plants from 1769, because Linnaeus gave the name to them thinking they were related to the classical plant.

thorn (n.)

Old English þorn "sharp point on a stem or branch," earlier "thorny tree or plant," from Proto-Germanic *thurnīn- (source also of Old Saxon, Old Frisian thorn, Dutch doorn, Old High German dorn, German Dorn, Old Norse þorn, Gothic þaurnus), from PIE *trnus (source also of Old Church Slavonic trunu "thorn," Sanskrit trnam "blade of grass," Greek ternax "stalk of the cactus," Irish trainin "blade of grass"), from *(s)ter-n- "thorny plant," perhaps from root *ster- (1) "stiff."

Figurative sense of "anything which causes pain" is recorded from early 13c. (thorn in the flesh is from II Corinthians xii.7). Also an Anglo-Saxon and Icelandic runic letter (þ), named for the word of which it was the initial.



# பண்பு – வள்ளுவ உளவியல்

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

பலதுறைக் கருத்துகளால் மானுட வெற்றியை வாய்ப்பாக்க வழிவகுக் கின்ற வள்ளுவம் மாந்த உளவியல் கருத்துகளையும் வகுத்துரைக்கின்றது. அம் மரபில் பண்பு என்கின்ற மனித எண்ண ஓட்டம் / செயல் / திறன் / இயல்பு போன்றவற்றைச் சுட்டுகின்ற உளவியல் கலைச்சொல்லையும் நுட்பமாக ஆண்டுள்ளது. ஒன்றன் வடிவம், நிறம், சுவை போன்ற குணங்களையும் இயல்பையும், மனிதனின் எண்ணப் போக்கையும் செயல்திறனையும் குறிப்பதாக இச் சொல் வழங்கப்படுகின்றது.

வள்ளுவத்தில் கீழ்வருகின்ற குறட்பாக்களில் இச் சொல் பல வடிவங்களில் பயில்கின்றது:
14, 45, 62, 97, 194, 389, 469, 579, 681, 683, 688, 700, 783, 810, 811, 851, 865, 871, 874, 912, 937, 955, 991, 992, 993, 994, 955, 995, 996, 997, 998, 1000, 1181.

இவற்றுள் 681, 683, 688 ஆகியவை தவிர்ந்த மற்ற குறட்பாக்களில் அடையாகக் குறட்பாக்களின் இடையில் இயல்கின்றது. ஆனால் 681, 683, 688 ஆகிய மூன்றிலும், இறுதிச் சொல்லாக பிறப்பு என்னும் வாய்பாட்டில் அமைந்து தகுதியை / திறனை விளக்குகின்ற துறைச்சொல்லாக விளங்குகின்றது.

"அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு" (681)

"நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு" (683)

"தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு" ( 688)

தூது அதிகாரத்தில் உள்ள இவற்றில் தூதனின் இலக்கணத்தையும், இயல்பையும் வள்ளுவர் உணர்த்துகின்றார் என்பதோடு இவண் வள்ளுவர் வகுத்துரைக்கின்ற பண்புகளை வளர்த்துக்கொண்டால் தூதும் சிறக்கும்; தூதனும் புகழடைவான். இங்ஙனம் வள்ளுவம் சீர்மைக்கும் வளமைக்கும் தனிமனித மேன்மைக்கும் வழிவகுக்கின்றது; வள்ளுவம் தெளிந்தால் ஒளிரலாம்.

நன்றி: இணையத் தரவுகள்

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 181–182ஆவது கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 181, 182வது கூட்டங்கள் முறையே 22.05.2025, 23.05.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் கலந்துள்ள பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பெற்று வல்லுநர்களின் ஒப்புதலுக்குப் பின் சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்தவகையில் 22.05.2025, 23.05.2025 ஆகிய இருநாள்கள் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற தமிழ்க் கலைக்கழகத்தின் 181,182ஆவது கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை,

'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், முனைவர் ஆ. அரிமாப்பாமகன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 411 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :

| | |
|---|---|
| Cumulative Fund | திரள் நிதி |
| Escrow Agent | மூன்றாந்தரப்பு முகவர் |
| Fire Risk Assessment | தீ இடர் மதிப்பீடு |
| Pandemic Management | பெருந்தொற்று மேலாண்மை |
| Payback Period | ஒப்புவிப்புக் காலம் |
| Portfolio Diversification | முதலீட்டுப் பல்வகைமையாக்கம் |
| Proxy Voting | போலி வாக்களிப்பு |
| Relief Camp | துயரழிப்புப் பாசறை |
| Relief Operation | துயரழிப்பு நடவடிக்கை |
| Revenue Tribunal | வருவாய்த் தீர்ப்பாயம் |
| Risk Mitigation Plan | இடர்த் தணிப்புத் திட்டம் |
| Unrealized Gain | கைவரா ஈட்டம் |
| Aseptic Packaging | தொற்று நீக்கிய அடைப்புணவு |
| Carbonised food | கரிமம் ஊட்டிய உணவு |
| Consignment tracking | சரக்குத் தடமறிதல் |
| Dry Curing | உலர் பதப்படுத்துதல் |
| Deglaze | சுவையீனி |
| E numbers | உணவு குறியீட்டு எண் |
| Emulsifier | பால்மமாக்கி |
| Food borne disease | உணவு தரு நோய் |
| Food debris | உணவுக் குப்பைகள் |
| Fully Cooked | முழு வேக்காடு |
| Further Processing | சமையல் மேலாக்கம் |
| Functional food | இயல்பு உணவு |
| Glycaemic Index | சருக்கரைக் குறியீட்டு எண் |
| Health claim | நலக்காப்பீட்டுக் கோரிக்கை |
| High risk food | கடுஞ்சிக்கல் உணவு |
| Marinate | ஊறவைத்தல் |

# அகரமுதலி இயக்ககத்தில் கல்லூரி மாணவர்களுக்கு அகப்பயிற்சி




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்களுக்குத் தூயதமிழ்ப் பயன்பாடு, தமிழ்க் கணியச்சு, கலைச்சொல்லாக்கம், மின் அகராதியின் தேவை, மொழிபெயர்ப்பு உள்ளிட்டவை குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது.

12.05.2025 முதல் 10.06.2025 வரை நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்டு பயன்பெற்ற மாணவர்களுக்குப் பயிற்சியின் நிறைவில் அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் சான்றிதழ்கள் வழங்கிப் பாராட்டுத் தெரிவித்தார்.

அகப்பயிற்சி நாள்களில், இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து மாணவ – மாணவிகளுக்குத் தமிழ்க் கணியச்சு, கணினி பயன்பாட்டிற்கான அடிப்படைச் செய்திகள் குறித்துப் பயிற்சியளித்தார். பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், 'சொற்பிறப்பியல் அகராதி' குறித்தும், முனைவர் தி.பாலசுப்பிரமணியன் 'மொழிபெயர்ப்பு' குறித்தும் பயிற்சியளித்தார்கள்.

பதிப்பாசிரியர்கள் கி. தமிழ்மணி 'கலைச்சொல்லாக்கம்' குறித்த செய்முறை விளக்கமளிக்க, தொகுப்பாளர்கள் முனைவர் வே. கார்த்திக் 'வேர்ச்சொல்லாய்வு' 'படைப்பிலக்கியம்' குறித்தும், திருமதி ஜெ. சாந்தி 'கலைச்சொல்லாக்கம்' குறித்தும் விளக்கமளித்தனர்.

தொகுப்பாளர்கள் வே. பிரபு 'சொற்குவை' குறித்தும், கி. இராமர் 'அகராதியியல்' குறித்தும், திருமதி கு.சங்கீதா 'தமிழ்நாட்டரசின் தமிழ்வளர்ச்சி அமைப்புகள்' குறித்தும் எடுத்துரைத்தனர்.